# சுவாமி விவேகானந்தர்

ஆசிரியர் " முத்து "



ஒவியர்கள் :

திரு. ரவி

திரு. சேவியர்

திரு. விஜய்




ளியிடுவோர்:

த்து நுண்கலை வெளியீட்டகம்

*(The Muthu Fine Art Publications, Sivakesi)*

*சிவகாசி.*



SRI RAMAKRISHNA MISSION VIDYALAYA

SRI RAMAKRISHNA VIDYALAYA P. O.
Telephone : 23655 Telegrams : "KALVI"
COIMBATORE DISTRICT
S. INDIA

29—9—1970

அன்புடையீர்,

சுவாமி விவேகானந்தர் செய்தி ஆண்மை தருவது. நிறைந்த சக்தியைக் கொடுப்பது. அதைப்படிப்பவர் மனதில் நாட்டின்பால் ஆழ்ந்த அன்பையும், தங்கள் பாலும், தம் மக்கள் பாலும் ஆழ்ந்த நம்பிக்கையையும் உண்டாக்குவது.

அவரைப் பற்றி முவர்ணப்படங்களுடன், நம் பிள்ளைகள் ஆர்வத்தோடு பயிலும் வண்ணம் ஒரு நூல், முத்து நுண்கலை வெளியீட்டகத்தார் கொண்டு வருவதைப் பாராட்டுகிறேன்; குமரிமுனைப் பாறையின் பேரில் ஒரு அரிய, புனிதமான கோவில் எழுப்பப்பட்டிருக்கும் இத்தருணத்தில், இந்நூல், நம் மக்கள் உள்ளங்களிலும் அவருக்கு கோயில் உண்டாக்க உதவுமாக.

இந்த அரிய முயற்சியை வாழ்த்துகிறேன். இளைஞர்கள் இதைப் படித்துப் பயன் பெறுவார்களாக.

அன்புள்ள,

தி. சு. அவிநாசிலிங்கம்

( தி. சு. அவிநாசிலிங்கம் )

# முன்னுரை.

26-4

நம் நாட்டில் தோன்றிய பல்வேறு பெரியார்களுள் சுவாமி விவேகானந்தர் ஆன்மீகத் துறையில் தலைசிறந்த பெருமகனுர் என்பதனை நாடு நன்கறியும். அவர் வாழ்க்கை வரலாற்றினைச் சிறு கையேடாக இளைஞர்களுக்கும், மாணவர்களுக்கும் ஏனையோர்க்கும் பயன்படும் வகையில் வண்ணப் படங்களுடன் வெளியிட வேண்டும் என்று எங்களுக்குப் பல ஆண்டுகளாக அவா உண்டு. கன்னியாகுமரியில் விவேகானந்தர் நினைவுச் சின்ன திறப்பு விழா நிகழும்போதே ஆன்மீகப் பெரியாரின் வாழ்க்கையினை வெளியிட முயற்சித்தோம். முயற்சி வெற்றி பெறும் என்ற நம்பிக்கையில் இந்நூலை உத்தமர் காந்தி பிறந்த நன்னுளில் வெளியிடுகின்றோம்.

எங்கள் கருத்து இந்நூல் பன்மொழிகளில் வெளியிடப்பட வேண்டுமென்பதாகும். இன்று வெளியிடப்படும் இச்சிறு நூல் ஏனைய மொழிகளில் விரைவில் வெளியிடப்படும் என்பதனையும் தெரிவித்துக்கொள்கிறோம். இந்நூலினை எழுதவும், திருத்தவும் உதவிய பெருந்தகைகளுக்கும், வண்ணப் படங்களை சிறப்புற வரைந்து உதவிய ஓவியர்களுக்கும் எங்கள் நன்றி.

தங்கள் நல்லாதரவைக் கோரும்

பதிப்பாளர்கள்.

**முத்து நுண்கலை வெளியீட்டகம்**

(The Muthu Fine Art Publications, Sivakasi.)

சிவகாசி.

# சுவாமி விவேகானந்தர்

கங்கை நதி தீரத்தில் காளிதேவி கோயில்கொண்ட காளிகட்டம் என்று அழைக்கப்பெற்ற வங்காளத்தின் தலைநகராகிய கல்கத்தாவில் சென்ற நூற்றாண்டில் விஸ்வநாத தத்தர் என்ற ஒரு பெரியார் வசித்து வந்தார். அவர் க்ஷத்திரிய வம்சத்தில் தோன்றியவர். உத்தம குணங்கள் கொண்ட பேரறிஞர். அன்னார் கல்கத்தா நீதி மன்றத்தில் வழக்கறிஞராக நேர்மையுடன் சம்பாதித்த செல்வத்தைத் தயாள சிந்தையுடன் தன்னுடைய எதிர்காலத்தை எண்ணாது யாசித்த வறியவர்களுக்கு இல்லையென்னாது ஈந்து, பண்டிதரும் பாமரரும் போற்றும் வண்ணம் வாழ்ந்தார்.

விஸ்வநாத தத்தருக்குப் புவனேஸ்வரி மாதா என்ற அம்மையார் வாழ்க்கைத் துணைவியாக வாய்த்தார். அவர் அன்பு, பண்பு, அடக்கம், அமைதி, அஞ்சாமை ஆகிய அணிகலன்களுடன் மிகுந்த கடவுள் பக்தியுடன் மிளிர்ந்தார். இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்களைப் பூரணமாகக் கற்றுணர்ந்து அதன்படி தூய்மையான இல்வாழ்க்கை நடத்தி, புதல்வியர் இருவரை ஈன்றெடுத்துச் சிறப்பாக வளர்த்து வந்தார். அவர், ஆண்மகவு இல்லையே என்று ஏங்கித் தம் குலதெய்வமாகிய காசி விஸ்வநாதப் பெருமானை மன்றாடிப் பிரார்த்தித்து வந்தார். எல்லாம் வல்ல பெருமானின் அருளால் புவனேஸ்வரி மாதா கர்ப்பமுற்று, கி. பி. 1863ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 12ஆம் நாள், தைத்திங்கள் முதல் நாளாகிய சங்கராந்தியன்று அழகிய ஆண் மகவு ஒன்றைப் பெற்றெடுத்தார். தவத்தின் பலனாகவும், சிவபெருமானது அருளாலும் அவதரித்த அக்குழந்தையின் பிறந்த நாளையும் நட்சத்திரத்தையும் கணித்து நரேந்திரநாதன் என்று பெயர் சூட்டி, கண்ணின் மணி போல் காத்து வளர்த்தார்கள். மூன்றாவது வயதளவில் பாலகன் நரேந்திரநாதன் சுட்டித்தனம் மிக்கவனாய் வீட்டில் பெரும் குழப்பத்தை உண்டுபண்ணி வந்தான். தாய் தந்தையர்கள் இவனை எவ்வளவுக்கெவ்வளவு மிரட்டினார்களோ அவ்வளவுக்கவ்வளவு இவனது துடுக்கும் துணிவும் அதிகரித்தன. துடுக்கு நிறைந்த நரேந்திரநாதனை வசப்படுத்துவதற்கு வழி ஒன்றே ஒன்று தானிருந்தது. அதாவது இவன் மூர்க்கத்தனம் செய்யும்போதெல்லாம் அன்னையார் இவனை நீர்க் குழாய்க்கடியில் அமர்த்தித் தண்ணீர் இவன் தலைமீது சதா வீழ்ந்துகொண்டிருக்கும்படி செய்து விடுவார். பொழியும் புனலின் கீழ் மட்டும் இவன் நெடுநேரம் சாந்தமாகச் சும்மா இருப்பான்.

பாலகனது மூர்க்கத்தனத்தையும் பிடிவாதத்தையும் பார்க்கச் சகியாத தாய், "பிள்ளை வரம் வேண்டிச் சிவபெருமானிடம் தவமிருந்த எனக்கு அவன் தன் பூதகணங்களில் ஒன்றை அனுப்பியிருக்கிறான்; என் செய்வேன்?" என்று தமது மனச்சலிப்பை வெளியிடுவார். தனது தமக்கைமார் இருவரையும் நரேந்திரநாதன் அலைக்கழித்தது இவ்வளவவ்வளவென்று சொல்ல முடியாது. அவன் விளைவித்த தொந்தரவைத் தாங்கமுடியாத அச் சிறுமிகள் அவனைப் புடைக்க ஓடிவந்தால் அவன் விரைந்தோடிச் சாக்கடையில் நின்றுகொண்டு "என்னை வந்து அடியுங்கள்!" என்று எரிச்சலூட்டுவான். அசுத்தமான சாக்கடைக்குத் தமக்கையர் எப்படிச் செல்வார்கள்! ஆனால் துடுக்கே வடிவெடுத்து வந்த அச் சிறுவனுக்கு மட்டும் சுத்தம் என்பதும் அசுத்தம் என்பதும் தெரியாது.

நரேந்திரநாதன் சாதுக்களிடத்திலும், எளியவர்கள் மீதும் மிகுந்த அன்பும் அனுதாபமும் கொண்டிருந்தான். யாசிப்பவர்கள் யாரேனும் தன் வீட்டு வாயிலுக்கு வந்துவிட்டால் கைக்குக் கிடைத்ததையெல்லாம் எடுத்து அவன் அவர்களுக்கு வழங்கி விடுவான். இரந்தார்க்கு இல்லையெனுது ஈதல், தத்தர் குடும்பத்தின் ஒரு தனிப் பெருமை யெனினும் நரேந்திரநாதனின் தீவிரத்தை மட்டுப்படுத்தாவிடில் வீட்டில் உடுத்தும் ஆடை உட்பட எப்பொருளும் மிஞ்சாது என எண்ணி எச்சரிக்கையுடன் கண்காணிக்க வேண்டியதாயிற்று. பாலகனுக இருந்தபோது பொருளனைத்தும் வாரி வாரி வழங்கிய வள்ளல் பிற்காலத்தில் அருளனைத்தும் வாரி வாரி வையகமெல்லாம் வழங்கும் மேதையாகத் திகழ்வார் என யாரும் அப்பொழுது அறிந்திலர்.

புவனேஸ்வரி மாதா தன் பாலகனுக்குத் தான் பெற்ற காப்பிய அறிவையும், பக்தியின் பெருமையையும் முறையாகப் புகட்டிய விதமும் அதை நரேந்திரநாதன் கிரகித்த விதமுமே நரேந்திரநாதன் தன் வாழ்வில் அடைந்த மேன்மைக்குக் காரணம் ஆகும். பாலகனுக்கு, பிலே என்ற செல்லப் பெயரும் உண்டு. நரேந்திரநாதன் அவர்கள் வீட்டு வண்டி ஓட்டுகிறவருடன் நெருங்கி உறவாடுவது வழக்கம். ஒருநாள் வண்டி ஓட்டுபவரோடு பேசிக்கொண்டிருந்தபோது எத்தனையோ பேச்சுக்களுக்கிடையே விவாகத்தைப்பற்றிய பேச்சும் எழலாயிற்று. அப்போது என்ன காரணத்தாலோ திருமணம் பற்றி வெறுப்புக்கொண்டிருந்த வண்டிக்காரர், அதனை மிகவும் பழித்து, மணம் புரிவதுதான் எல்லாவித துன்பங்களுக்கும் காரணம் என்றும் அது மனிதனைப் பூரணமாகக் கட்டுப்படுத்தி, பந்தம், பாசம், சுயநலம், இச்சை, குறுகிய நோக்கம் ஆகியவற்றினுள் பிணைத்துவிடும் என்றும் போதித்தது, பாலகனின் மனதில் பசுமரத்தாணிபோல் பதிந்தது.

வண்டிக்காரரின் உபதேசத்தின் விளைவால், நரேந்திரநாதனின் மனதில் அவன் வணங்கி வந்த சீதாராமன் மீது கொண்டுள்ள பக்தியில் ஒரு மாற்றம் நேரிட்டது. சீதையும், ராமனும் மணம் புரிந்து கொண்டவர்கள் என்ற கருத்தில், சம்சார பந்தத்தில் கட்டுண்டவர்களைக் கடவுளாக வணங்கக் கூடாது எனக் கருதி உடனே பூஜை அறைக்கு விரைந்து சீதா ராமனது விக்ரகத்தைப் பற்றி எடுத்து வீதியிலே விட்டெறிய அது வீழ்ந்து சுக்கலாயிற்று. அதன் பின்னர் சிவபெருமானது விக்ரகம் ஒன்றை அமர்த்தி அதன் அருகே அமர்ந்து நிஷ்டை புரிவதில் ஆனந்தம் கொண்டான். நரேந்திரநாதன் தனது பள்ளித்தோழர்களுடன் விளையாடுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தான். அவன் தன் நண்பர்களுக்குத் தலைவனாகவும், ராஜா மந்திரி விளையாட்டில் தான் ராஜாவாகவும், ஒருவன் மந்திரியாகவும், மற்றொருவன் சேனாதிபதியாகவும், மிகுதி உள்ளவர்கள் சிப்பந்திகளாகவும், பூஜா மண்டபத்துப் படிகளில் உட்கார்ந்து விளையாடுவது வழக்கம். அச்சமயத்தில் பார்த்தால் உண்மையாகவே நரேந்திரநாதன் ஒரு தேசத்து ராஜா போல் ராஜ கம்பீரத்துடன் காணப்படுவான். அவன் விளையாட்டு முடிந்ததும், தான் பெரியவனானதும் ஒரு ராஜாவாகவோ, முற்றும் துறந்த துறவி வேந்தனாகவோ ஆகக்கூடும் எனக் கூறுவான். நரேந்திர நாதனுக்கு சிலபல மாணவத் தோழர்களைச் சேர்த்துக்கொண்டு அமைதியாக அமர்ந்து தியானம் பண்ணுவதில் மிகுந்த விருப்பம். தோழர்கள் அதிக நேரம் அமர்ந்து இருக்க இயலாது. நரேந்திரநாதனோ தன்னை மறந்து தியானத்தில் மூழ்கிவிட்டால் அவனை யார் கூப்பிட்டாலும் கேட்காது. ஒரு நாள் அவர்கள் தியானத்தில் அமர்ந்து இருந்தபோது எங்கிருந்தோ ஒரு பாம்பு நரேந்திரநாதனின் முன்வந்து படம் எடுத்து ஆடியது. அதைக் கண்ணுற்ற தோழர்கள் அய்யோ, அம்மா என்று அலறிய வண்ணம் ஓடி அன்னையாரிடம் தெரிவித்தார்கள். அன்னை வந்து பார்த்தபோது பாம்பைக் காணோம். ஆனால் பாலகன் ஆழ்ந்த பரவச நிலையில் இருந்தான். தாயின் பயிற்சியால் சிவலிங்கத்தின் அருகில் அமர்ந்து நிஷ்டை புரிவதில் வல்லமை கொண்டு அதன் பலனாகத் தேகபலம், ஆரோக்கியம், மன உறுதி, தெளிவு, ஞாபக சக்தி, முன்னறிவு, சாந்தம், ஆனந்தம், பண்பு, புலனடக்கம் ஆகிய அரும் பெரும் சக்திகளை எளிதில் பெற்றான். நரேந்திரநாதன் கண்ணயரும் போது அவனை நோக்கி ஜோதி ஒன்று வருவதும் அதில் கலந்து மெய்மறந்து விடுவதும் அவனது மூன்றும் வயது முதல் ஆயுள் முழுமையும் நீடித்து இருந்தது.

26-4



நரேந்திரநாதனின் கல்வித் திறமும், ஞாபக சக்தியும், அவனுக்குக் கல்வி பயில்வித்த ஆசிரியர் வியக்கும் வண்ணம் இருந்தன. குறுகிய காலத்தில் சமஸ்கிருத நிகண்டாகிய அமரகோசத்தை மனப்பாடம் செய்து விட்டான். நரேந்திரநாதன் உரிய காலத்தில் உயர்தரப் பள்ளிக்கு அனுப்பப் பட்டான். அங்கு மிக்க சுறுசுறுப்பு உள்ளவனுகத் திகழ்ந்தான். மேற் படிப்புக்குச் சென்ற போது ஆங்கிலம் கற்கவேண்டியது அவசியமாயிற்று. ஆனுல் அது வேற்று நாட்டு மொழி என்று எண்ணி முதலில் மறுத்த போதி லும் பின்னர் அதன் அவசியத்தை உணர்ந்து முழு மனதுடன் கற்றுத் தேர்ந்தான். அச்சமயத்தில் பிரம்மசமாஜத்தின் தலைவராக ஸ்ரீ கேசவ சந்திரசேனர் இருந்தார். அவரின் வாழ்க்கைமுறை, சமயசாதனைகள் ஆகியவற்றின்மீது நம்பிக்கை கொண்டு நரேந்திரநாதனும் தனது தோழர் களுடன் சமாஜத்தில் அங்கத்தினன் ஆனுன். அங்கு தியான தாரணங் களில் ஈடுபாடு கொள்வதும், பஜனை செய்வதும் பழக்கமாகியது. கல்லூரி யின் தலைவர் ஹேஸ்டி துரை பாடம் போதிக்கும் சமயத்தில், தியானம் அல் லது ஆழ்ந்த சிந்தனை செய்வதால் மனிதன் பேரானந்த நிலையை அடைய முடியும் என்றும், தக்ஷிணேசுவரத்தில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச ருக்கு இந்நிலை அடிக்கடி ஏற்படுகிறது என்றும் கூறினுர். ஒரு நாள் நண்பர் ஒருவரின் அழைப்பின் பேரில் பரமஹம்சரின் முன்னிலையில் பாடும் வாய்ப்புக் கிட்டியது. நரேந்திரநாதன் மனதை முற்றும் பாட்டில் செலுத்தி மிகவும் இனிமையாகப் பாடலானுன். பாடலைக் கேட்டுப் பரவசநிலை யடைந்த பரமஹம்சர் அவனை நோக்கி, "ஒருதினம் தக்ஷிணேசுவரத்திற்கு வா" என்று கூறினுர். நரேந்திரநாதனும், "ஆகட்டும்" எனப் பதில் உரைத்தான். சில நாட்களுக்குப் பின்னர் அவன் தானே பரமஹம்சரைத் தேடி, தக்ஷிணேசுவரத்திற்குப் புறப்பட்டான். செல்லும் வழியில் மனதிலே "கடவுளைக் கண்டோர் யாரேனும் உண்டோ?" என்ற சிந்தனையுடன் சென் ருன். அவரை அடைந்ததும் "ஐயா, தாங்கள் ஈசனைக் கண்டது உண்டோ?" எனக் கேட்டான். நரேந்திரநாதனிடம் பரமஹம்சர், "உன்னை எப்படிப் பார்க் கின்றேனே அப்படியே ஈசனைக் காண்கிறேன். உன்னிடம் பேசுவதைப் போலவே ஈசனிடமும் பேசுகிறேன். நீயும் அவரைப் பார்க்கவேண்டுமானுல் உனக்கும் காண்பிக்கிறேன்" என்று மலர்ந்த முகத்துடன் கூறினுர். குரு வின் ஆசியால் நரேந்திரநாதனுள் பரமார்த்திக வாழ்க்கை ஆரம்பமாகியது. குருதேவர் அவனுக்கு தியானம், தாரணம் ஆகியவற்றைக் கற்பித்தார்.

நரேந்திரநாதன் கல்லூரிப் பேராசிரியர்கள் வியக்கும் வண்ணம் கல்வி கற்று பி. ஏ. வகுப்பில் தேர்ச்சியடைந்தான். பின்னர் வக்கீல் தொழிலுக்காகப் படித்துக் கொண்டிருந்தான். அவ்வமயம் ஒருநாள் நண்பன் ஒருவனுடைய வீட்டிற்குச் சங்கீதம் பாடச் சென்றிருந்தான். அப்போது தந்தை விஸ்வநாத தத்தர் இருதய நோயால் திடீரென மரணமடைந்து விட்டார் என்ற அதிர்ச்சி தரும் செய்தி அவனுக்குக் கிடைத்தது. தந்தையின் மரணத்தால் தன்னைச் சுற்றிலும் இருள்சூழக் கண்டான். தந்தைக்குப் பின்னர் குடும்பம் வறுமைப் பிணிக்குள்ளாகியது.

ஒருதினம் நரேந்திரநாதன் தக்ஷணேசுவரத்திற்குச் சென்று தங்களுக்கு ஏற்பட்டுள்ள வறுமை நிலையைப் பரமஹம்சரிடம் கூறி, தரித்திர நிலையைப் போக்குமாறு வேண்டினன். அப்போது பரமஹம்சர், ''அன்னை பராசக்தியிடம் சென்று பிரார்த்தனை செய்துகொள். நீ கேட்பது கிடைக்கும்'' என்றார். அவர் சொற்படி நரேந்திரநாதன் காளிதேவியின் ஆலயத்திற்குச் சென்றான். ஆலய தீபஒளியில் அன்னை பராசக்தியின் அருளுருவைக் கண்டான். தேவியை நோக்கி தனக்கு விவேக வைராக்கியத்தையும், ஞானத்தையும், பக்தியையும், அளிக்குமாறு இதயம் கனிந்து வேண்டினன். திரும்பி வந்ததும் பரமஹம்சர், ''என்ன வேண்டிக்கொண்டாய்?'' என வினவ, தான் எண்ணியதை விட்டு மற்றதைக் கேட்டு வந்ததை உணர்ந்தான். அவனை மறுபடியும் ராமகிருஷ்ணர், கோவிலுக்கு அனுப்பி வைத்தார். இரண்டாவது முறையும் அவனால் உணவு,உடை, பணம், பொருள் வேண்டுமென்று பிரார்த்திக்க முடியவில்லை. மூன்றும் முறை சென்றபோதும் முன்மாதிரியே நிகழ்ந்தது. அதைக்கண்ட பரமஹம்சர், ''உன் தலையில் இல்லற இன்பத்தை எழுதி வைக்கவில்லை. உன் வீட்டில் இருப்பவர்களுச்கு உணவிற்கும், உடைக்கும் எந்தவித குறைவும் வராது என்று ஆசீர்வதிக்கிறேன்'' என்று கனிந்த குரலில் கூறினார். நாளடைவில் அச்குடும்பத்தில் இருந்த கஷ்டம் சிறிதுசிறிதாகக் குறைந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய தொண்டையில் புற்றுநோய் ஏற்பட்டது. அவருக்கு சுத்தமான காற்றோட்டம் நன்மைதரும் எனக்கருதி காசிப்பூரில் பூங்காவனம் சூழ்ந்த ஓர் வீட்டிற்குப் பரமஹம்சர் கொண்டுவரப் பட்டார். ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரனை நோக்கியவாறு தியானத்தில் அமர்ந்து, தன்னுடைய தவப்பலனை நரேந்திரனுக்கு வழங்கி, "எல்லோரையும் கவனித்துக்கொள். அன்னை பராசக்தி அருள் புரிவாள்'' என்றுகூறி சந்நியாச வாழ்க்கைக்கான உபதேசத்தைக் கொடுத்தருளினார். இச்சம்பவம் நிகழ்ந்த சில நாட்களில் பரமஹம்சர் தனது பூதஉடலை நீத்து ஆனந்தத்தில் மூழ்கி மகாசமாதி யடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் தேகத்தை உகுத்தான பிறகு, அவருடைய இளம்சிஷ்யர்களுக்கு மண்ணுலக வாழ்க்கையில் பற்று முழுவதும் நீங்கியது. தங்களுடைய குருவினுடைய பாரமார்த்திகப் பெரு வாழ்வைப் பின்பற்றி, புனிதவாழ்வு வாழவேண்டுமெனத் தீர்மானித்து, ஜனசஞ்சாரமற்ற வாரநகர் என்னுமிடத்தில் பாழும்கட்டிடமொன்றில் குடி புகுந்து தவம்புரிய எண்ணினர். நரேந்திரநாதன் அவர்களுக்குத் தலைவர் ஆனார். அவர்கள் அனைவரும் உலகப்பற்று யாவையும் நீத்துவிட்டதற்கு அறிகுறியாகக் காவியுடை அணிந்து கொண்டார்கள்.

தலைவராக விளங்கிய நரேந்திரநாதன், தம் உள்ளுணர்வினால் மேலான எண்ணம் நிறைவேற, தாம் வெளி உலகத்திற்குச் செல்ல வேண்டுமென்பதை உணர்ந்தார். அதன்படி அவர் வாரநகர் மடத்திலிருந்து தேசசஞ்சாரம் செய்யப் புறப்பட்டுவிட்டார். துறவிக்கேற்ப கையில் பொருள் ஏதும் எடுத்துக் கொள்ளவில்லை. தம்மை நாடிவரும் உணவைமட்டும் ஏற்றுக்கொண்டு தம் பயணத்தை மேற்கொண்டார். அவர் இமாலய யாத்திரை செல்லும் மார்க்கத்தில் தமது குருசகோதரர்களான அகண்டானந்தர், சாரதானந்தர் ஆகியவர்களை வழியில் தற்செயலாகக் கண்டு மகிழ்வுற்றார். பிறகு அவர்களைத் தம்மோடு அழைத்துக்கொண்டு, அம்மலைநாட்டினுள்பிரவேசித்து, ஆழ்ந்த நிஷ்டைபுரிந்து, மனம் ஒடுங்கப்பெற்று சாந்தமூர்த்தியாகத் திகழ்ந்தார். அங்கிருந்து ரிஷிகேஷம் வந்து, சிறிது நோய்வாய்ப்பட்டு, ஒரு சந்நியாசியின் வைத்திய சிகிச்சையால் தெளிவு பெற்றெழுந்து, குருசகோதரர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, தான் தனியாகவே தென்திசை நோக்கிப் பிரயாணம் துவக்கினார்.

வழியில் ஆழ்வார்ராஜ்யத்தில் அவர் பிரவேசித்தார். சுவாமிகளின் பெருமையைக் கேள்வியுற்ற ஆழ்வார்மகாராஜா, அழைப்பு விடுத்து அவருடன் விவாதம் புரிந்தார். மன்னர், கல்லாலும், மண்ணாலும், உலோகத்தாலும் ஆன விக்ரகங்களை வணங்குவதில் தனக்கு விருப்பமில்லை எனக் கூறிப் புன்னகைத் தார். சிறிதுநேரத்தில் சுவாமிகள் அங்கு சுவரில் மாட்டப்பட்டிருந்த படம் ஒன்றை எடுத்து வரும்படி கூறினார். அதன்மீது காரித்துப்புமாறு அங்கிருந்த திவானிடமும், மற்றவர்களிடமும் கட்டளையிட்டார். அவர்கள் மருண்டும் வெகுண்டும், வியர்த்தும் போனார்கள். அப்போது சுவாமிகள், ''இது வெறும் கண்ணாடியும், காகிதமும்தானே! அதன்மீது துப்புவதற்கு என்ன ஆட்சேபம்?'' என்றார். பதிலுக்கு அவர்கள், ''இது அரசர் பெருமானின் படமல்லவா!'' என்று அடங்கிய குரலில் கூறினார்கள். உடனே சுவாமிகள் அவர்களிடம், ''அரசரின் நினைவுச்சின்னமான படத்திற்கு நீங்கள் மரியாதை தெரிவிப்பது போலவே, பக்தர்களும் கடவுளின் நினைவுச் சின்னங்களான விக்ரகங்களுக்கு வணக்கம் தெரிவிக்கிறார்கள்'' என்று விளக்கம் கூறினார்.

சுவாமிஜி ஆழ்வார் ராஜ்யத்திலிருந்து அழகு பொருந்திய ஆபு மலைக் குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்தார். அப்போது கேத்ரி மகாராஜா அம்மலைக்கு யாத்திரை வந்திருந்தார். சுவாமிகளின் பெருமையை உணர்ந்த மன்னர் அவரின் சீடரானர். மற்றும் பல சமஸ்தானங்களையும், பம்பாய் நகரையும் பார்த்துவிட்டுப் பூனு போய்ச் சேர்ந்தார். அங்கு பாலகங்காதர திலகருடன் தேசமுன்னேற்றம் சம்மந்தமாக உரையாடல்கள் நிகழ்த்தினர். பின்னர் அங்கிருந்து பெல்காம் வழியாக, தென்திக்கு நோக்கிப் புறப் பட்டார். வழியில் பல நாட்கள் உணவில்லாது பயணம் செய்ய நேரிட்டது. பல இன்னல்கள், இடர்ப்பாடுகளிடையே சுவாமிகள் பங்களூர் வந்து சேர்ந்தார். அங்கு ராஜா ஸ்ரீ சாமராஜேந்திர உடையாரை நேரில் கண்டு சமஸ்தான நடைமுறைகள் பற்றித் தனது கருத்துக்களை எடுத்துச் சொன் னர். மகாராஜா அமெரிக்காவில் அடுத்து நடைபெற இருந்த சர்வ மத சபைக்கு சுவாமிஅவர்கள் விஜயம் செய்ய வேண்டுமென்றும், அதற்குத் தாம் பொருள் உதவி புரிய ஆயத்தமாய் இருப்பதாகவும் கூறினர். "தெய்வ சங்கற்பப்படி ஆகுக" எனக்கூறி, சுவாமிகள் அங்கிருந்து புறப்பட்டுக் கொச்சி, திருவனந்தபுரம் ஆகிய மலைநாடுகளின்வனப்பைக் கண்டு களித்து, பின்னர் மதுரை மார்க்கமாக ராமநாதபுரம், ராமேஸ்வரம் முதலிய இடங்களுக்குச் சென்றார். ராமநாதபுரம், ராஜா, ராஜா சேதுபதியுடன் சுவாமிகளுக்கு நெருங்கிய பரிச்சயம் ஏற்பட்டது. ராஜாவும், சுவாமி கள் அமெக்கா செல்ல ஆகும் பொருட் செலவைத் தான் ஏற்றுக் கொள்வ தாகக் கூறினர். ஆனல் அவருக்கும் சுவாமிகள் உறுதிமொழி கூருது அங் கிருந்து புறப்பட்டுப் பாரதத்தாயின் திருவடியாக விளங்கும் கன்யாகுமரிக்கு எழுந்தருளி அங்குள்ள பாறையில் அமர்ந்து நிஷ்டையில் ஆழ்ந்தார்.

கன்யாகுமரியில் சுவாமிகளின் மனதில் உதித்த எண்ணங்கள் எண்ணில் அடங்கா. இமயம் முதல் குமரி வரை ஒரே புண்ணிய பூமி என்று அவருக்கு விளங்கிற்று. வெவ்வேறு விதமான பாங்குடைய, மக்கள், மொழிகள், பழக்க வழக்கங்களுக்கிடையே உள்ள ஒற்றுமையும் அவருக்குப் புலப்பட்டது. பல்லாயிரம் ஆண்டுகளாகப் பாரமார்த்திகம் ஒன்றே பாரத நாட்டின் ஒரே லட்சியமாகவும், தர்மம் ஒன்றே புண்ணிய பூமியின் உயிர்நாடியாகவும் தழைத்தோங்கிக் காலமெல்லாம் மேன்மைகளு டன் மிளிர்ந்திருந்தன, அறம் குறையவே நாட்டில் கேடுகள் பல வந்துள் ளன என்பதை உணர்ந்து சனதனதர்மத்தின் மேன்மைகளை எடுத்துப் புகட்டி இந்தியாவை ஒழுங்குபடுத்த எண்ணினர். பின்னர் ஜெகன் மாதாவை வணங்கிவிட்டு, சுவாமிகள் சென்னையை நோக்கிப் புறப்பட்டார்.

மக்களின் கோலாகல வரவேற்பிடையே சுவாமிகள் சென்னை வந்து சேர்ந்தார். அங்கு "ஆங்கிலம் பேசுகிற சுவாமிகள்" பட்டணத்தில் பிரவேச மாயிருக்கிறார் என்ற விபரம் ஊர் முழுவதும் அதிவேகமாகப் பரவியது. கல்லூரிகளிலிருந்து ஆசிரியர்களும், மாணவர்களும் அவரைக் காணச் சென்றார்கள். பல்வேறு பொருட்களைப் பற்றிய பேச்சுக்கள் அவர்களிடையே நிகழ்ந்தன. சுவாமிகள் கல்வியில் கரைகாண முடியாத கடல் என எல்லோ ரும் தீர்மானித்தார்கள். அதன் பேரில் அமெரிக்காவில் நடைபெறவிருக்கும் சர்வமத மஹா சபையில் கலந்து கொள்ள சுவாமியவர்களே பொருத்த மானவர் என்று தீர்மானித்து அவர் அமெரிக்கா செல்வதற்கான பொருளை நிதிவசூல் மூலமாகத் திரட்ட அனைவரும் ஊக்கங்கொண்டனர். ஆனால் இதுவரை பணத்தை கையாளாதிருந்த சுவாமிகளோ, "இனிக் கையாண் டாக வேண்டுமே" என்று ஏங்கி, "இறைவன் திருவுளப்படி ஆகுக" என்று அமைதியுற்றார்.

மேலும் சுவாமிஜி ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருடைய கட்டளையை எதிர் பார்த்தவராக இருந்தார். அன்னை ஸ்ரீ சாரதாதேவியாருக்குத் தன்னுடைய வெளிநாட்டுப் பயணத்துக்கான அனுமதியையும், ஆசியையும் கோரி, கடிதம் எழுதியிருந்தார். ஒருநாள் சுவாமிகள் சமுத்திரக் கரையில் நின்று கொண்டிருந்தபோது அலை கடலின் மத்தியில் நின்று கொண்டு ஸ்ரீ பரம ஹம்சர் தன்னை அழைப்பதாக உணர்ந்தார். அதே சமயத்தில் அன்னை சாரதாதேவியாரிடமிருந்து அனுமதியும், ஆசியும் அளித்துப் பதில் கடிதம் கிடைக்கப் பெற்றார். அமெரிக்காவுக்குப்போக, சுவாமி இசைந்தானதும் சென்னை மாணவர்களால் நிதியும் விரைவில் சேகரிக்கப்பட்டது. பம்பாயிலி ருந்து அவர் கப்பல் ஏறவேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. வழியில் கேத்ரி சென்றபோது ராஜா அஜித்சிங், "சுவாமிகள் வேறு பெயர் மாற்ரு மல் விவேகானந்தா என்ற பெயரைச் சூட்டிக்கொள்ள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். அதுவரை சுவாமிஜி தன்னை யாரும் அறிந்து கொள்ளாதிருக்கும் பொருட்டுத் தம் இயற்பெயரைச் சச்சிதானந்தா என்றும், விவீதிஷானந்தா என்றும் அடிக்கடி மாற்றிக்கொண்டேயிருந்தார். அதன்பின் ராஜா அஜித்சிங்கின் வேண்டுகோளின்படி கடைசி வரையிலும் விவேகானந்தா என்ற பெயரை மாற்றிக்கொள்ளவேயில்லை. திவான் ஜகன் மோகன்லால் சுவாமிஜியை வழியனுப்ப பம்பாய் வந்திருந்தார். கடைசியாக 1893 ஆம் ஆண்டு மே மாதம் 31 ஆம் நாள் கடவுளின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு பெனின்சுலார் என்ற பெயர் படைத்த கப்பலில் ஏறி, சுவாமிகள் மேல்நாட்டிற்குப் பிரயாணமானார். கப்பல் கொழும்பு, பினங்கு, சீனு, ஹாங்காங் வழியாக ஜப்பான்போய்ச் சேர்ந்தது. அழகும், ஆக்கமும், ஊக்கமும் வாய்க்கப் பெற்று, அதிவேகமாய் முன்னேற்றம் அடைந்து வந்த அந்த நாட்டைப் பார்த்துவிட்டு, சுவாமிகள் பரந்த பசிபிக்மகா சமுத்திரத் தைக் கடந்து மேற்கு அமெரிக்காவில் கனடாவைச் சார்ந்த வான்கூவர் என்ற இடத்தை அடைந்தார்.

பின் வான்கூவரிலிருந்து சிகாகோ நகரம் போய்ச் சேர்ந்தார். ஒருசில நாட்களில் சிகாகோவில் நடந்த உலகப் பொருட்காட்சியைக்கண்டு களித்தார். சர்வமத மகா சபை கூடுவதற்கு இன்னும் இரு மாதங்கள் ஆகும் என்று தகவல் தெரிந்து கொண்டார். தன்னிடமுள்ள பணம் மிகக் குறைவு எனக்கருதி, சிக்கனமாக வாழக்கருதி எளிய நகரமான பாஸ்டனுக்குப் புறப்பட்டார். பிரயாணம் செய்து கொண்டிருக்கையில் ரயில் வண்டியில் இவரோடு பேசிக்கொண்டுபோன வயோதிகப் பெண்மணி ஒருவர் இவரைத் தனது இல்லத்தில் விருந்தினராகச் சிறிது காலம் இருக்குமாறு கேட்டுக் கொண்டார். நிகழ்வதெல்லாம் தெய்வச் செயல் எனக் கருதிய சுவாமிஜியும் அவரது அழைப்பிற்கிணங்கி அந்தப் பெண்மணியின் விருந்தினராக இருக்கச் சம்மதம் தெரிவித்தார். அங்கு ஆசிரியர் ஜே. எச். ரைட் என்பவர் சுவாமிகளுடன் உரையாடி அவரின் மகிமைகளை அறிந்து கொண்டார். அவர், சர்வமத மகாசபையில் சுவாமிகள் இந்துமதத்தைப் பற்றி உபந்நியாசம் செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அவர் சுவாமிஜியை சிகாகோ நகருக்கு எழுந்தருளக் கேட்டுக்கொண்டு சர்வமத மகாசபைத் தலைவருக்கு, சிபாரிசுக் கடிதம் ஒன்றும் கொடுத்ததுடன் போதிய பணவசதியும் செய்து கொடுத்தார். சுவாமிஜி சிகாகோ நகரம் வந்து சேர்ந்தது இரவு நேரம். அச்சமயம் தான்வந்து சேரவேண்டிய இடத்தின் விலாசத்தையும் தவறவிட்டுவிட்டதால் இராப்பொழுதை ஓர் காலி ஜாதிக்காய் பெட்டியில் கழித்தார். பொழுது புலர்ந்தது. தான் எங்கு செல்வதென்று சிந்தனை செய்து கொண்டே நடக்க ஆரம்பித்தார்.

தாம் அடைய வேண்டிய இடத்தின் சரியான விலாசம் இல்லாத காரணத்தால் அவர் சந்திப்பதற்கிருந்தவர் பெயரை மட்டும் சொல்லி விசாரித்தபோது பலர் சிரித்தும், சினந்தும், வேடிக்கை செய்தும் அவரை அவமானப்படுத்தினர். சிலர் தங்களுக்கு அவர் குறிப்பிடும் நபர் தெரிந்திலர் என்று இன்சொல் கூறினர். சற்றுக் களைப்புத் தோன்றியபோது அண்மையில் இருந்த ஒரு வீட்டின் வாயிற்படியில் உட்கார்ந்தார். தற்செயலாக வெளியே வந்த அவ் வீட்டின் சொந்தக்கார ஹேல் அம்மையார் சுவாமிஜியைப் பார்த்ததும் "தாங்கள் சர்வசமயமகாசபையின் பிரதிநிதியா" எனக் கேட்டு அறிந்து கொண்டு அவருக்கு வேண்டிய உணவு வசதிகளை ஏற்பாடு செய்து கொடுத்ததுடன் தங்குவதற்கும் இடங்கொடுத்தார். சுவாமிஜியும் அக்குடும்பத்தில் ஒருவராக, அந்த அம்மையாரை அன்னையாகவும், அந்த அம்மையாரின் கணவரான ஹேல் துரையைப் பிதாவாகவும் நினைத்து அங்கேயே தங்கியிருக்கலானர்.

கவலைகளையெல்லாம் ஒழித்துக் கடவுளையும் தம் குருநாதரையும் மனதார வாழ்த்திவிட்டு நிஷ்டை புரிந்தும், பிரார்த்தனைகள் செய்தும் அவர் ஏனைய நாட்களைப் போக்குவாராயினர்.

ஹேல் அம்மையார் சுவாமிஜியை 1893-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ஆம் தேதி ஆரம்பமாகிய சர்வசமய மகாசபைக்கு அழைத்துச் சென்ருர். மிகப்பெரிய அந்தச்சபையைப் பார்த்ததும், சுவாமிஜி அங்கு திறமையாகப் பேச, தனக்கு போதிய மனோபலத்தையும், வாக்கு வன்மையையும் அளித் தருளுமாறு தனது குருநாதரை மானசீகமாக வேண்டிக்கொண்டார். அவர் மிகுந்த குடும்பப்பாசத்துடன் சபையை நோக்கி, ''அமெரிக்க நாட்டு சகோதரிகளே! சகோதரர்களே!'' என்று அழைத்ததும் சபையெங்கும் கரகோஷம் முழங்கிற்று. அப்பொழுதே அவர் அமெரிக்கநாட்டு மக்களின் உள்ளங்களில் ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுக்கொண்டார். மேலும் அவரது பேச்சில் காணப்பட்ட தெய்வீகத்தன்மையும், உறுதியும் அவருக்கு மகா சபையில் மட்டுமல்லாது அமெரிக்காவெங்கும் அவருடைய புகழைப் பரவச் செய்தன. அச்சபையில் அவர் இந்துமதத்தின் பெருமைகளைச் சிறப்போடு எடுத்துக் கூறியது, பலர் சுவாமிஜியைப் பின்பற்றும் நிலையை ஏற்படுத்தியது. பல இடங்களிலிருந்தும் சுவாமிஜிக்கு சொற்பொழிவுகள் நிகழ்த்துமாறு ஏராளமான அழைப்புகள் வந்தன. அவர்களுடைய சொற்பொழிவுகளிற் சில, புத்தக வடிவிலும் உருப்பெற்று ஏராளமான அளவில் விற்பனையும் ஆயின.

மிக அதிகமாகச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியதாலும், பல்வேறு சங்கங்களில் கலந்துகொண்டதாலும், ஓய்வின்றி பயணம் மேற்கொண்ட காரணத்தாலும் சுவாமிகள் மிகவும் களைப்புற்ருர். அச்சமயம் அவருடைய பக்தையான பெண்மணி ஒருவர், செயின்ட் லூயிஸ் நதியின் நடுவில் உள்ள தீவில் கட்டப்பெற்றுள்ள, தனது இல்லத்திற்கு அவரை அழைத்துச் சென்ருர். அவருடன் சில அமெரிக்கப் பெண்களும், ஆண்களும் சென்ருர்கள். அவர்களுக்கு சுவாமிகள் தியானம், தாரணை ஆகியவற்றில் பயிற்சியளித்தார். சுவாமிகளின் ஒப்பற்ற சொற்பொழிவுகளின் விளைவால் அமெரிக்காவில் பலவேதாந்தச்சங்கங்கள் தோன்றின. சுவாமிகளும் அங்கு தனது உபதேசங்கள் வேரூன்றிவிட்டதை உணர்ந்தார்.

சுவாமிகளுடைய உபதேசங்களைக் கேட்க விரும்பி, இங்கிலாந்தி லிருந்தும் அழைப்பு வந்தது. இங்கிலாந்து மக்கள் சுவாமிஜியை வரவேற்று, சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடுகள் செய்தனர். ஒருநாள் சமயச்சொற்பொழிவு நிகழ்த்திய பின், ஒரு மாது சுவாமிஜியிடம், ''நீங்கள் சொல்வதை என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை'' என்று பகர்ந்தார். சுவாமிஜி புன்னகையுடன், ''இன்று புரியாவிட்டாலும் நாளை புரியும்'' என்ருர். அப்பெண்மணியின் பெயர் மார்கரெட் நோபிள் என்பதாகும். அந்த அம்மையார் பின்பு சுவாமிஜி யின் உபதேசத்தால், அவரைப் பின்பற்றி மக்கள் தொண்டில் ஈடுபட்டார். பின்னர் சுவாமிஜியின் ஆசியால் சகோதரி நிவேதிதை எனப் பெயர்பெற்று, தன்னைப் பாரதநாட்டின் சேவைக்கு அர்ப்பணித்து மிகுந்த பெருமை பெற்ருர்.

அன்னை பராசக்தியின் அருளால் மேலை நாட்டுப் பயணத்தை மிகவும் வெற்றிகரமாக புகழுடன் முடித்துக்கொண்டு சுவாமிஜி தாய் நாடு திரும்பும் வழியில் 1897ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 15ஆம் தேதி இலங்கை வந்தடைந்தார். அங்கும் அமோக வரவேற்புகளுக்கிடையே பயன் மிக்க சொற்பொழிவுகள் பல ஆற்றிவிட்டு நமது புனித பூமியாகிய பாரத மண்ணில் தம் திருவடிகளை வைத்தார். அவ்விடத்தில் சுவாமிகளின் சீடராகிய ராமநாதபுரம் ராஜா திரு பாஸ்கர சேதுபதி, சுவாமிகளின் திக்விஜயத்தின் ஞாபகார்த்தமாக வெற்றித்தூண் ஒன்றை நாட்டினார். பின்பு சுவாமிகள் ராமநாதபுரம், மதுரை, கும்பகோணம் ஆகிய ஊர்களில் பிரசங்கங்கள் செய்துவிட்டு, சென்னை வந்தடைந்தார். அங்கு சுவாமிகளுக்கு, அதுவரை யாரும் கண்டிராத வகையில் மிகப் பெரிய அளவில் வரவேற்புக் கொடுத்து, சுவாமிகள் வெளிநாடு சென்று வந்ததை ஒன்பது நாட்கள் விழாவாகக் கொண்டாடினார்கள். பிரதி தினமும் மாலையில் சுவாமிகளின் பிரசங்கங்கள் நடந்தன. பல தேசபக்தர்கள் சுவாமிகளின் சொற்பொழிவுகளை விரும்பிக் கேட்டனர். அவர்களுக்கு சுவாமிகள் தேச முன்னேற்றம் பற்றியும், தேச பக்தியைப் பற்றியும் தமது சொற்பொழிவுகளால் விரிவாக எடுத்துச் சொன்னார்கள். சென்னை பக்தர்கள் சுவாமிஜியை, சென்னையிலேயே இருந்துவிடுமாறு வேண்டினார்கள். ஆனால் சுவாமிகளோ வங்கமக்களையும் விழிப்படையச் செய்ய வேண்டுமென்று மறுமொழி கூறிவிட்டு கடல் மார்க்கமாக பெப்ரவரிமாத இறுதியில் இத்தர்பூர் துறைமுகத்தை அடைந்து, அங்கிருந்து சியால்தா ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்.

ஆறு ஆண்டுகளுக்கு முன் சாதாரணமனிதராக தேசசஞ்சாரம் சென்றவர் இன்று உலகை ஓர் புதிய பாதையில் நடத்துகின்றவராய், பாரதத்தை விழித்தெழச் செய்பவராய், வீர விவேகானந்தர் உருவத்தில் திரும்பி வந்துள்ளார். சியால்தா ரயில் நிலையத்தில் கடல் ஒலி போன்ற மக்களின் பலத்த கரகோஷங்களுக்கிடையே சுவாமிகள் மக்களைக் கரம் குவித்து வணங்கிய வண்ணம் வண்டியை விட்டுக் கீழ் இறங்கினார். அவருக்கு அணிவிக்கப்பட்ட மலர் மாலைகள் அவரது திருவுருவத்தையே மறைத்து விட்டன. அதி அற்புதமாக அலங்கரிக்கப்பட்ட வீதிகளின் வழியாக ஊர்வலம் வந்து முடிவுபெற வெகு நேரமாகியது. ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் வாரநகர் மடத்தில் தனது குரு சீடர்களையும், நண்பர்களையும் விட்டுப் பிரிந்த விவேகானந்தர் அங்குச் சென்று அவர்களைச் சந்திக்கலானார். தலைவரைக் கண்ட குரு சகோதரர்கள் பேரானந்தம் கொண்டனர். சுவாமிகளைத் தரிசிக்கவும், தங்கள் ஐயங்களை அகற்றிக் கொள்ளவும் மக்கள் ஏராளமாக வந்து சேர்ந்தனர். 1897ஆம் ஆண்டு மே மாதத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடர்கள் அனைவரையும் சுவாமிகள் கல்கத்தாவில் கூட்டி, ஐக்கிய வாழ்வின் அவசியத்தை விளக்கிக் கூறி ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பேரால் தாங்கள் துவக்கியிருக்கும் இயக்கம் விரிவடைவதற்காக ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பெயரில் சத்சங்கம் ஒன்றை அன்று நிறுவினார். தவம், சாஸ்திர ஆராய்ச்சி, தியான சாதனைகள், பரோபகாரத்தொண்டு இவற்றின் மூலமாக வாழ்க்கையை மேன்மைப்படுத்த வேண்டியதே அச்சங்கத்தின் குறிக்கோளாயிற்று.

அச் சமயத்தில் நாட்டின் பல பாகங்களிலும் வறுமைப் பிணி தலை விரித்தாடியது. சுவாமிஜியும், அவர்களது சீடர்களும், சுவாமி அகண்டானந்தரைக் கொண்டு மூர்ஷிதாபாத் ஜில்லாவில் பஞ்ச நிவாரணப் பணியைத் துவக்கி வைத்தனர். மடம், சமய சபை ஆகியவற்றின் பொறுப்பை, சுவாமி பிரமானந்தரிடம் ஒப்படைத்துவிட்டு சுவாமிஜி மீண்டும் இமயத்தினை நோக்கி அல்மோரா நகருக்குச் சென்றார். அங்கு சிறிது ஓய்வு எடுக்க எண்ணினார். ஆனால் அவர் எண்ணியபடி ஓய்வுகொள்ளாது பிரயாசையுடன் அங்கு ஓர் ஆசிரமம் நிறுவுவதற்கு ஏற்பாடுகள் செய்தார். பல்வேறு திக்குகளிலிருந்தும் சொற்பொழிவு ஆற்ற அழைப்புகள் வந்துகொண்டேயிருந்தன. அல்மோராவில் சில உபந்நியாசங்கள் நிகழ்த்திவிட்டு காஷ்மீர், பஞ்சாப், இராஜபுதனம், முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார். இராஜபுதனத்தில் ஏற்கனவே தனக்குத் தொடர்பு ஏற்பட்டிருந்த ஆழ்வார், கேத்ரி போன்ற சமஸ்தானங்களுக்கும் சென்றுவிட்டுப் பின் கல்கத்தா வந்தடைந்தார். அங்கு கங்கை நதி திரத்தில் பேலூர் கிராமத்தில் ஒருவீடு வாடகைக்கு எடுக்கப் பெற்று, 1898 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அவ் வீட்டிற்கு அருகிலேயே மடம் ஒன்றும் ஸ்தாபிக்கப்பட்டது. சுவாமிஜியின் அமெரிக்க நாட்டுப் பக்தராகிய மிஸஸ் ஒலிபுல்லும், ஆங்கிலப் பக்தராகிய மிஸ் முல்லரும் பேலூர் மடத்தை நிறுவுவதற்குப் பொருள் உதவி செய்தார்கள். இந்த மேனாட்டுப் பக்தர்கள் பாரத நாட்டைக் காண்பதற்கும், அதன் மக்களை நேசிப்பதற்கும், அவர்களுக்குப் பணிபுரிவதற்கும் ஆயத்தமாக இருந்தார்கள். அத்தருணத்தில் கல்கத்தாவில் கடுமையாக, பிளேக் தொற்று நோய் காணப்பட்டது. எண்ணற்ற நபர்கள் அக் கொள்ளை நோயால் மடிந்து போயினர். அது ஒரு தொற்று நோயாதலால் நகரவாசிகள் திகில் அடைந்து நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள். அக் கொடிய நோயினால் பீடிக்கப்பட்டவர்களது நிலைமையைக் கண்ணுற்ற சுவாமிகள் மனம் இளகினார்.

உடனே அவரும், மற்ற குரு சகோதரர்களும், சீடர்களும் கூடி நிவாரண வேலைகளைத் துவக்கினார்கள். சுவாமிஜியின் கட்டளைக் கிணங்க சகோதரி நிவேதிதை இச் சேவையின் முழுப் பொறுப்பையும் ஏற்றுப் பிறர் வியக்கும் வண்ணம் தொண்டாற்றினார்.

பின்பு சுவாமிகள் தமது மேனுட்டுப் பக்தர்களை அழைத்துக்கொண்டு, காஷ்மீரில் சில நாட்களைக் கழித்துவிட்டு, ச கோ த ரி நிவேதிதையுடன் அமர்நாத் வந்தடைந்தார். அங்கு க்ஷீரபவானி ஆலயத்தில் ஓர் அற்புத மான அனுபவத்தைப் பெற்றதுடன் மண்ணுலகில் தனது தொண்டுகள் முடி வடைந்துவிட்டன என்பதனையும், தன்னுடைய வாழ்நாள் முடிவடையப் போகிறது என்பதனையும் மானசீகமாய் உணர்ந்தார். ஆசிரியர், தலைவர் என்பன எல்லாம் மறந்து தான் யார் என்பதனை அப்போது உணர்ந்தார். எல்லாம் வல்ல சிவபெருமானிடம் "என்னை இப்பிறவிப் பெருங்கடலி லிருந்து கரையேற்று" என்று மனம் உருகிப் பாடினுர். இதன் பின்னர் சுவாமிகளின் மனம், தொண்டு, சேவை போன்றவைகளில் ஈடுபடவில்லை. ஆனுல் அவர் ஆரம்பித்த தொண்டுகளை மட்டும் ஒருவாறு உருவாக்க முயன்று கொண்டிருந்தார். இமாலயத்தில் சேவியர் தம்பதிகள் "மாயா வதி" ஆசிரமத்தை நிறுவி அதன் மூலம் சொருபானந்தரின் உதவியுடன் "பிரபுத்த பாரதம்" என்ற ஆங்கில மாதப் புத்தகத்தை வெளியிட்டார்கள். அந்த நாளிலேயே பேலூர் மடமும், நிவேதிதை பெண் பாடசாலையும் ஆரம் பிக்கப்பட்டன. சுவாமிஜியின் சீடர்களில் ஒருவரான திரிகுணுதீதானந்தர் கல்கத்தாவிலிருந்து "உத்போதன்" என்ற மாதப் பத்திரிக்கையை வெளி யிடும் பொறுப்பை ஏற்றுர். சுவாமி அகண்டானந்தர் ஓர் அனுதை ஆசிர மத்தை நிறுவினுர். காசியிலும் இரு ஆசிரமங்கள் நிறுவப்பட்டன. அச் சமயம் சுவாமிகள் மறுபடியும் அமெரிக்கா, ஐரோப்பா போன்ற இடங் களுக்குப் போய்வர விரும்பி சுவாமி துரியானந்தரையும், சகோதரி நிவேதிதையையும் அழைத்துக்கொண்டு கப்பலில் பிரயாணமானுர். பிரயா ணத்தின்போது சுவாமிகள் "பரிவிராஜக", "கிழக்கும் மேற்கும்" என்ற உலகப் புகழ் பெற்ற இரண்டு நூற்களை எழுதினுர். இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் உள்ள நண்பர்கள் சுவாமிஜியைப் பார்த்து மிக மகிழ்ச்சி யடைந்தார்கள். சுவாமிகளும் தமது தொண்டு சீரிய முறையில் நடப் பதைக் கண்டு மிகவும் மனத்திருப்தியடைந்தார்கள். 1900ஆம் ஆண்டு பாரிசில் நடந்த சரித்திர ஆராய்ச்சி மகா சபையில் பிரெஞ்சு மொழியில் இந்து தர்மத்தைப் பற்றி மிகவும் விரிவாக ஒரு சொற்பொழிவாற்றினுர். பின் ஐரோப்பா, எகிப்து வழியாகப் பாரதம் வந்தடைந்தார். இமாலயத்தில் பணிபுரிந்து வந்த சேவியரின் மரணச் செய்தியைக் கேட்டறிந்த சுவாமிகள் சேவியர் அம்மையாருக்கு ஆறுதல் கூறும் பொருட்டு மாயாவதி ஆசிரமம் சென்றுர். அங்கு சில நாட்கள் தங்கி, பின் சுவாமிகள் பேலூர் மடத் திற்குத் திரும்பினுர்.

சுவாமிகள் பேலூர் மடத்தில் அலுவல்கள் அனைத்தும் செவ்வனே நடந்தேறுவதைக் கண்டு பெருமகிழ்ச்சி யடைந்தார். அவர் டாக்கா நகரத்தில் சொற்பொழிவாற்றிவிட்டு அஸ்ஸாமிலுள்ள பல க்ஷேத்திரங்களைத் தரிசித்தார். பின்னர் ஷில்லாங் சென்று பேலூர் திரும்பினார். மறுபடியும் சென்னை செல்ல விரும்பினார். ஆனால் உடல் நிலை சரியில்லாத காரணத்தால் செல்ல முடியவில்லை. மடம், சமய சபை ஆகியவற்றின் பொறுப்புகளை யெல்லாம் சகோதர சீடர்களிடம் ஏற்கனவே ஒப்புவித்திருந்தார். புத்துயிர் அளிக்க வல்ல தமது குருதேவரது பரமானந்த கொள்கைகள் உலகெங்கும் இனி பரவிக்கொண்டே போகும் என்று அவர் உணரலானார். ஊன் உடலை உகுப்பதற்கேற்ற ஏற்பாடுகளை சுவாமிகள் அதிவேகமாகச் செய்து வந்தார். ஆக்கையை நீக்குவதற்கான நாள் அணுக அணுக அவரது மனம் அந்தர்முகப்பட்டு ஆத்ம சொருபத்தில் திளைக்கலாயிற்று. ஒரு நாள் உச்சி வேளையில் சுவாமிகள் தமது சீடர்களை உடன் அமர்த்தி அவர்களுக்கு அமுது பாகம் பண்ணித் தம் திருக்கரம் கொண்டே பரிமாறினார். பின்பு தாமே அவர்களுக்கு நீரும் வார்த்தார். "சீடர்கள் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் சுவாமிகள் செய்வது பொருந்தாது," என „அவர்கள் மறுத்தார்கள். "ஏன் இயேசுநாதர் அவ்விதம் செய்யவில்லையா?என சுவாமி விடையிறுத்தார். அன்று பிற்பகல் சுவாமிகள் வேதாந்த பாடத்தையும் நடத்தி வைத்தார். தங்களது தலைவனிடம் பாடம் கேட்பது அதுதான் கடைசி முறை யென்பதைச் சீடர்கள் அப்போது அறிந்திலர். அன்று மாலையில் ஸ்ரீமத்பிரமானந்த சுவாமிகளுடன் நெடுந்தூரம் உலாவச் சென்றிருந்தார். அப்போது மடாலயத்தை நடத்தும் முறையையும், சமஸ்கிருதக் கல்வி முறையைப் பரப்பும் முறை பற்றியும் விளக்கி ஓதினார். பின்னர் மடாலயத்திலிருந்த அனைவரையும் வரவழைத்துக்கொண்டு அன்பு கனிந்த இன்மொழிகளால் அவர் உரையாடிக்கொண்டிருந்தார். சந்தியா வேளையில் கோயில் தீப ஆராதனை துவக்கப்பட்டது. தம்மைச் சூழ்ந்திருந்த சீடர்களைச் சுவாமிகள் ஆலயத்திற்கு அனுப்பிவிட்டு, சுவாமிகள் தமக்குக் குற்றேவல் புரிந்து வந்த சீடரை மட்டும் வாயிலில் நிஷ்டையில் இருந்து காவல் புரியச் சொல்லிவிட்டு, தமது அறைக்குச் சென்று நிஷ்டை புரிய அமர்ந்தார். அறைக்குள் சுவாமிகள் கிழக்கு முகமாகப் பிரம்ம நிஷ்டையில் ஆழ்ந்தார். நேரம் ஆக ஆக சுவாமிஜியின் பொறி, புலன்களும் அடங்கிவிட்டன: சுவாசப் போக்கு வரத்து சிறிது சிறிதாக ஒடுங்கி சுவாமிகள் அகண்ட சச்சிதானந்தத்தில் கலந்தார்.

இதைப் பற்றிய செய்தி தந்தி மூலமாக உலகின் பல்வேறு இடங்களுக்கு அனுப்பப்பட்டது. மறுநாள் காலையில் சுவாமிஜியின் அன்பர்கள் கணக்கற்றோர் கல்கத்தா நகரில் வந்து கூடினார்கள். ஒரு கட்டிலின் மேல் வைக்கப்பட்டிருந்த சுவாமியின் திருவுடலை இலட்சக்கணக்கான மக்கள் வந்து தரிசித்து வணங்கி நின்றார்கள். அன்று மாலை வேளையில் அவருடைய உடல் புனித கங்கை நதியின் கரையிலுள்ள வில்வ மரத்தடியில் அக்னியில் இடப்பட்டது. **"நான் உடலை உகுத்துவிட்டு ஓசையாக விளங்குவேன்." - "I shall be a voice without form" -** என சுவாமிகள் முன்பே கூறியிருந்தபடி என்றும் அவர், உருவமற்ற அருள் ஓசையாக இருந்து வருவார்.

**"எழுமின், விழிமின், கருதிய கருமம் கைகூடும் வரை உழைமின்" - "Arise, Awake and Stop not till the Goal is reached"** என்று உபதேசித்த உத்தமரின் நினைவாக அவர்மீது பற்றுக் கொண்ட பக்தகோடிகளின் அன்பளிப்பினால் குமரி முனையில் தேவி பாதம் பதிவுற்ற பாறை அருகே அவர் முன்பு நிஷ்டையில் இருந்த பாறைத் திட்டிலேயே வரலாற்றுப் புதுமையுடன் மண்டபம் ஒன்றை நிறுவ எண்ணி 1964ஆம் ஆண்டு நவம்பர் மாதம் விவேகானந்தர் மண்டப வேலை துவங்கியது. அஜந்தா குகையின் 15ஆம் எண் முகப்பின் வடிவை நினைவூட்டும் வண்ணம் மண்டபத்தின் முகப்புத் தோற்றம் அமைக்கப்பட்டது. மண்டப முகப்பின் மேற்பகுதியில் உள்ள நீண்ட சதுர விமானம் பல்லவர் காலத்திய சிற்பங்களை நினைவூட்டும் அற்புதக் கலையழகுடன் உருவாகியுள்ளது. சிற்ப வரலாற்றில் புதுமையான முறையில் அமையும் வண்ணம், மண்டபத்தில் உள்ள உத்திரக் கற்களிலும், கல் தூண்களிலும் மெருகேற்றி அதன்மீது சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஆரம்பத்தில் ஆறு இலட்சம் ரூபாயில் உருவாக்க எண்ணிய அத்திட்டம் அன்பர்களின் அமோக ஆதரவால் தேசியத் திட்டமாக உருவெடுத்து எண்பது இலட்ச ரூபாய் செலவில் உருவாக்கப்பட்டுள்ளது. அழகிய கம்பீரமான எட்டு அடி உயரமுள்ள சுவாமிஜியின் வெண்கலச் சிலை ஒன்றை மண்டபத்தில் நிறுவியுள்ளார்கள்.

குமரி முனையில் அமைந்துள்ள அழகிய நினைவு மண்டபம் என்றென்றும் மக்கள் மனதில் சுவாமிகளின் நினைவும், செயல்களும் நீங்காது நிலைத்திருக்கச் செய்யுமென்பதில் சற்றும் ஐயமில்லை.

---

# சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள்

ஆண்மையளிப்பதே கல்வியின் லட்சியமாயிருக்க வேண்டும். மனிதனுடைய மனோசக்தியைத் தன்வயப்படுத்தி, தக்க துறையில் செலுத்த உதவுவதே கல்வி யெனப்படும்.

இரும்பு போன்ற தசைகளும், எஃகு போன்ற நரம்புகளும், எதனாலும்தடுக்க முடியாத அளவற்ற சக்தியும் வாய்ந்தவர்களே நம் நாட்டிற்கு இப்போது தேவை. அவர்கள் சக்தியானது, எதற்கும் அஞ்சாததாய், அண்டசராசரங்களின் அந்தரங்க இரகசியங்களையும் ஊடுருவி அறியவல்லதாய், அறிந்தபின் அவற்றின் நோக்கத்தை எவ்வகையிலும்பூர்த்திசெய்யும் ஆற்றல் உள்ளதாய், அவசியமானால் மரணம் ஏற்படினும் அஞ்சாததாயிருத்தல் வேண்டும்.

மனோவளர்ச்சிக்கு ஒரேஒரு முறைதான் உண்டு. அதுதான் மனத்தை ஒருமுகப்படுத்தல் என்பது. மனஒருமையின் சக்தியே அறிவுக் களஞ்சியத்தின் திறவுகோல். புனித வாழ்க்கையும், தொடர்ச்சியாகத் தியானம் செய்வதும் மனஒருமையைத்தரக் கூடிய சிறந்த சாதனங்களாகும்.

சிரத்தையும், தன்னம்பிக்கையும் மக்களுக்குப் போதிப்பதையே என் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருக்கிறேன். இந்த உயர்ந்த சீரியகொள்கையை நம் குழந்தைகளுக்குப் பிறவியிலிருந்தே ஊட்டி வளர்ப்போமாக.

அளவற்ற பலமே சமயமெனப்படும். பலத்துடன் வாழ்வதே நற்கருமம். பலவீனமே பாவம்.

சத்தியத்தைத் தைரியமாக மேற்கொள்ளுங்கள். சத்தியம் சாஸ்வதமானது. சத்தியத்தை அறியஉரைகல் ஒன்று உள்ளது. எந்தஒன்று தேகத்திற்குப் பலவீனத்தைத்தருகிறதோ, எந்த ஒன்று நம் அறிவையும், உணர்ச்சியையும் பலவீனமாக்குகிறதோ அதை, நஞ்செனஒதுக்கித் தள்ளுங்கள். எது பலத்தைக் கொடுக்கின்றதோ அதுதான் உண்மை. உண்மை பரிசுத்தமானது. ஆகையால் உண்மை பலம்தரும்; அறிவின் பிரகாசத்தை உண்டாக்கும்; வீரத்தையும் பெருக்கும். அதனை வாழ்க்கையில் கடைப்பிடித்து உயர்வடைவீர்களாக.

## வாழ்க்கை குறிப்பு.

| | |
|---|---|
| 1863 ஜனவரி 12 | கல்கத்தாவில் ஜனனம். |
| 1881 நவம்பர் | பகவான் இராமகிருஷ்ணருடன் முதல் சந்திப்பு. |
| 1882 (முற்பகுதி) | பகவான் இராமகிருஷ்ணருடன் நெருங்கிய தொடர்பு. |
| 1883 | பி. ஏ. பட்டப் படிப்பில் தேர்ச்சி பெறுதல். |
| 1884 | தந்தையாரின் மரணம். |
| 1886 ஆகஸ்ட் 16 | பகவான் இராமகிருஷ்ணர் மகாசமாதி அடைதல். |
| 1886 (பிற்பகுதி) | வாரநகர் மடத்தை நிறுவுதல். |
| 1886 டிசம்பர் கடைசி | ஆன்ட்பூரில் பூர்வாங்க சந்நியாசவிரதம் மேற்கொள்ளுதல். |
| 1888 (முற்பகுதி) | காசிக்குப் புனிதயாத்திரை. |
| 1888 (ஜூன்-நவம்பர்) | வட இந்தியாவிலுள்ள புண்ணிய ஸ்தலங்களுக்குப் புனிதயாத்திரை.. |
| 1888 நவம்பர் – 1889 டிசம்பர் | வாரநகர் மடத்தில் தங்குதல். |
| 1890 | பரிவ்ராஜக பரமஹம்சராய் தேச சஞ்சாரம் ஆரம்பித்தல். |
| 1892 டிசம்பர் | கன்னியாகுமரி செல்லல். |
| 1893 மே, 31 | அமெரிக்கப் பயணம். |
| 1893 ஜூலை 25 | வாங்கூவர் சேர்தல். |
| 1893 ஆகஸ்ட் கடைசி | ஆனிஸ்குவாம் நகரில் ஹார்வர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் ஜாண் ரைட்டைச் சந்தித்தல். |
| 1893 செப்டெம்பர் 11-27 | சிகாகோ நகரில் அனைத்துலக மத மகாநாட்டில் கலந்துகொள்ளுதல். |
| 1893 நவம்பர் 12 – 1895 ஜூன் | அமெரிக்காவின் மத்திய மேற்கு, கிழக்குக் கரைப் பகுதிகளில் மத வகுப்புகள், பிரச்சாரம் செய்தல். |
| 1895 ஜூன் 18 –ஆகஸ்ட் 7 | ஆயிரம்தீவுப் பூங்காவில். |
| 1895 ஆகஸ்ட் 17 | ஐரோப்பாவுக்குப் புறப்படுதல். |
| 1895 அக்டோபர்–நவம்பர் | லண்டனில் |
| 1895 டிசம்பர் 6 | அமெரிக்காவுக்குத் திரும்புதல். |
| 1896 ஏப்ரல் கடைசி | லண்டனுக்கு இரண்டாம் முறை செல்லுதல். |
| 1896 மே–ஜூலை | லண்டனில் உபந்நியாசம் செய்தல். |
| 1896 மே 28 | ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தில் மாக்ஸ்முல்லரை சந்தித்தல். |
| 1896 ஆகஸ்டு செப்டம்பர் | ஐரோப்பாவில் 6 வார சுற்றுப் பயணம். |

| | | |
|---|---|---|
| 1896 | அக்டோபர்–நவம்பர் | மீண்டும் லண்டனில் உபந்நியாசம். |
| 1896 | டிசம்பர் 30 | இந்தியாவுக்கு நேபிள்ஸ் நகரிலிருந்து புறப் |
| 1897 | ஜனவரி 15 | கொழும்பு சேர்தல். |
| ,, | ஜனவரி 26 | பாம்பனில் இறங்குதல். |
| ,, | பெப்ருவரி 6-15 | சென்னையில் தங்குதல். |
| ,, | பெப்ருவரி 21 | கல்கத்தா அடைதல். |
| ,, | மே 1 | கல்கத்தாவில் இராமகிருஷ்ண சங்கத்தை நிறுவுதல் |
| ,, | மே (கடைசி) | வட இந்தியாவுக்குப் புறப்படல். |
| 1898 | ஜனவரி | உத்தரப் பிரதேசம், பஞ்சாப், ராஜஸ்தான் மோரா ஆகிய இடங்களுக்குச் சென்று கல்கத்தா திரும்புதல். |
| ,, | [illegible] | மீண்டும் வட இந்தியாவில். |
| ,, | ஆகஸ்ட் 2 | அமர்நாத் செல்லுதல். |
| ,, | அக்டோபர் | க்ஷீரபவானியில் வாழ்க்கை. |
| ,, | அக்டோபர் 18 | கல்கத்தா திரும்புதல். |
| ,, | டிசம்பர் 9 | பேலூர் மடத்தை நிறுவுதல். |
| 1899 | மார்ச் 19 | மாயாவதி என்னுமிடத்தில் அத்வைத ஆ நிறுவுதல். |
| 1899 | ஜூன் 20 | மீண்டும் மேலைநாட்டுப் பயணத்தை மேற்கெ |
| ,, | ஜூலை 31 | லண்டன் சேர்தல். |
| ,, | ஆகஸ்ட் 26 | நியூயார்க் அடைதல். |
| ,, | ஆகஸ்ட் - நவம்பர் | ரிட்ஜிலி மேனரில் தங்கல். |
| 1899 | டிசம்பர்– | |
| 1900 | மே | கலிபோர்னியாவில் மத வேலை. |
| 1900 | ஜூலை 20 | ஐரோப்பாவிற்குப் புறப்படுதல். |
| ,, | ஆகஸ்ட்–அக்டோபர் | பாரீஸ் சர்வமத உற்பத்தி மகாநாட்டில் கல கொள்ளுதல். |
| ,, | அக்டோபர் 25-நவம்பர் முடிய | வியன்னு, கான்ஸ்டாண்டிநோபில், கெய்ரே இடங்களுக்குச் செல்லுதல். |
| 1900 | டிசம்பர் 9 | பேலூர் மடத்திற்குத் திரும்புதல். |
| 1901 | ஜனவரி | மாயாவதிக்குச் செல்லுதல். |
| 1901 | மார்ச்–மே | கிழக்கு வங்கம், அஸ்ஸாம் ஆகிய இடங்கள யாத்திரை. |
| 1902 | ஜனவரி பெப்ருவரி | காசி, புத்த கயா ஆகிய இடங்களுக்குச் வருதல். |
| 1902 | மார்ச்–ஜூலை 4 | பேலூர் மடத்தில் தங்குதல். |
| 1902 | ஜூலை 4 | மகா சமாதி அடைதல். |

Published by Muthu Fine Art Publications, Siv

